# ॥ प्रौढानुभूतिः ॥

## ப்ரௌடானுபூதி

(1)

प्रौढप्रौढनिजानुभूतिगलितद्वैतेन्द्रजालो गुरुः
गूढं गूढमघौघदुष्टकुधियां स्पष्टं सुधीशालिनाम्।
स्वान्ते सम्यगिहानुभूतमपि सच्छिष्यावबोधाय त-
त्सत्यं संस्मृतवान्समस्तजगतां नैजं निजालोकनात्॥

ப்ரௌடப்பௌரட நிஜானுபூதி கலித
த்வைதேந்த்ரஜாலோகுரு:
கூடம் கூடமகௌகதுஷ்ட குதியாம்
ஸ்பஷ்டம்ஸுதீசாலிநாம்।
ஸ்வாந்தே ஸம்ய கிஹானுபூதமபி
ஸச்சிஷ்யாவபோதாய தத்
ஸத்யம் ஸம்ஸ்ம்ருதவான்
ஸமஸ்தஜகதாம் நைஜம் நிஜாலோகநாத்॥

மிகச் சீரிய முறையில் ஆத்மானுபவம் பெற்று, அதன் மூலம் த்வைதம்' என்ற மாயை அகன்று தூயவராய் குரு விளங்கு கிறார். அவர், தான் அனுபவித்த உண்மையான அந்த ஆத்மானு பவத்தை நல்ல சிஷ்யர்களுக்கு அறிவுறுத்த வேண்டி நினைத்துப் பார்க்கிறார். ஆத்மானுபவம் நல்ல அறிவாளிகளுக்குத் தெளி வானதே; ஆனால் பாபங்கள் மேலிட்டு அறிவு மங்கியவருக்கு அது தெளிவாகாதுதான். தூய மனதில் அந்த ஆத்மானுபவம் தெளிவானதே.

(2)

द्वैतं मय्यखिलं समुत्थितमिदं मिथ्या मनःकल्पितं
तोयं तोयविवर्जिते मरुतले भ्रान्त्यैव सिद्धं न हि।
यद्येवं खलु दृश्यमेतदखिलं नाहं न वा तन्मम
प्रौढानन्दचिदेकसन्मयवपुः शुद्धोऽस्म्यखण्डोऽस्म्यहम्॥

த்வைதம் மய்யகிலம் ஸமுத்திதமிதம்
மித்யா மன: கல்பிதம்
தோயம் தோயவிவர்ஜிதே மருதலே
ப்ராந்த்யைவ ஸித்தம் நஹி।
யத்யேவம் கலு த்ருச்யமேததகிலம் நாஹம் நவா தன்மம
ப்ரௌடானந்த சிதேக ஸன்மயவபு:
சுத்தோऽஸ்மி அகண்டோऽஸ்ம்யஹம் ॥

அனைத்து இரட்டைத் தோற்றங்களும் மனதளவில் தோன்றியவையே; உண்மையில்லை. மனமயக்கத்தால்தான் தண்ணீரில்லாத மரு பூமியில் தண்ணீர் இருப்பதாகத் தெரிகிறது. இல்லையெனில் கண்ணுக்குப் புலப்பட வேண்டுமே. நானும் அதுவல்ல, அதுவும் எனதல்ல. உண்மையில் ஸத் - சித் - ஆனந்த வடிவமான அகண்ட - சுத்த ஆத்மாவாகவே நான் இருக்கிறேன்.

(3)

देहो नाहमचेतनोऽयमनिशं कुड्यादिवन्निश्चितो
नाहं प्राणमयोऽपि वा दृतिधृतो वायुर्यथा निश्चितः।
सोऽहं नापि मनोमयः कपिचलः कार्पण्यदुष्टो न वा
बुद्धिर्बुद्धकुवृत्तिकेव कुहना नाज्ञानमन्धन्तमः॥

தேஹோநாஹ மசேதநோऽயமனிசம்
குட்யாதிவந்நிச்சிதோ
நாஹம் ப்ராணயோऽபி வா த்ருதி
த்ருதோ வாயுர்யதா நிச்சித:।
ஸோऽஹம் நாபி மனோமய: கபிசல:
கார்பண்ய துஷ்டோ நவா
புத்திர் புத்தகுவ்ருத்திகேவ குஹநா
நாஜ்ஞானமந்தம் தம: ॥

'ஆத்மா' - என்பது என்ன? அது சுவர் போன்று உணரத் தக்கதும் ஆனால் உணர்வில்லாததுமான உடல் ஆத்மா அன்று; தோல் பையில் அடைக்கப்பட்டு அறியத்தக்க காற்று போல் ப்ராணனும் ஆத்மா அல்ல; குரங்குபோல் ஓரிடத்தில் நில்லாத

துஷ்ட மனதும் ஆத்மா அன்று; கெட்டதைத் தெரிந்து கொள்ளும் சூழ்ச்சியோ, கண்மூடித்தனமான அஜ்ஞானமோ கூட ஆத்மா அன்று.

(4)

नाहं खादिरपि स्फुटं मरुतल भ्राजत्पयः साम्यतः
तेभ्यो नित्यविलक्षणोऽखिलदृशिः सौरप्रकाशो यथा ।
दृश्यैः सङ्गविवर्जितो गगनवत्संपूर्णरूपोऽस्म्यहं
वस्तुस्थित्यनुरोधतस्त्वहमिदं वीच्यादिंसिन्धुर्यथा ॥

நாஹம் காதிரபி ஸ்புடம் மருதல
ப்ராஜத்பய: ஸாம்யத:
தேப்யோ நித்யவிலக்ஷணோ
ऽகிலத்ருசி: ஸௌரப்ரகாசோ யதா ।
த்ருச்யை: ஸங்கவிவர்ஜிதோ ககனவத்
ஸம்பூர்ண ரூபோऽஸ்ம்யஹம்
வஸ்துஸ்தித்யனுரோததஸ்த்வஹமிதம்
வீச்யாதிஸிந்துர் யதா ॥

மருபூமியில் தோன்றும் தண்ணீர் காட்சியை ஒத்திருப்பதால் ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களும் ஆத்மா அன்று, பின், எல்லாவற்றையும் காண்கிற சூர்ய ஒளி போன்று முன்கூறியவற்றினின்று வேறுபட்டதே ஆத்மா. கண்களுக்குப் புலப்படும் உலகப்பொருட்கள் எதுவோடும் சேராமல் ஆகாயம் போல் முழுப்பொலிவுடன் இருப்பதே ஆத்மா. உண்மையில் சமுத்ரமும், அதன் அலைகளும் வெவ்வேறு இல்லையாயினும், சமுத்ரத்தைச் சார்ந்ததே அலை, அலையைச் சார்ந்ததல்லவே சமுத்ரம். அதுபோலவே ஆத்மாவும் மற்றும் உலகத்தவையும் ஆகும்.

(5)

निर्द्वैतोऽस्म्यहमस्मि निर्मलचिदाकाशोऽस्मि पूर्णोऽस्म्यहम्
निर्देहोऽस्मि निरिन्द्रियोऽस्मि नितरां निष्प्राणवर्गोऽस्म्यहं ।
निर्मायोऽस्मि निरन्तरोऽस्मि विपुलप्रौढप्रकाशोऽस्महं
निर्मुक्ताशुभमानसोऽस्मि विगलद्विज्ञानकोशोऽस्म्यहम् ॥

நிர்த்வைதோऽஸ்மி அஹமஸ்மி
நிர்மலசிதாகாசோऽஸ்மி பூர்ணோऽஸ்ம்யஹம்
நிர்தேஹோऽஸ்மி நிரிந்த்ரியோऽஸ்மி
நிதராம் நிஷ்ப்ராண வர்கோऽஸ்ம்யஹம் ।
நிர்முக்தாசுபமானஸோऽஸ்மி விகலத்
விஜ்ஞான கோசோऽஸ்ம் யஹம்
நிர்மாயோऽஸ்மி நிரந்தரோऽஸ்மி
விபுலப்ரௌட-ப்ரகாசோऽ ஸ்ம்யஹம் ॥

ஆத்மா இரண்டற்றது, தூய அறிவு (ஞானம்) வடிவானது, முழுமையானது, உடலற்றது, உடல் உருபுகளுமில்லாதது. பிராணவர்கமும் இல்லை ஆத்மா. தூய அந்த: கரணமாகவும், விஞ்ஞான கோசமாகவுமில்லை ஆத்மா. மாயை நீங்கியது, தொடரானது, பெரும் ஒளியேயானது ஆத்மா.

(6)

मत्तोऽन्यत्र हि किंचिदस्ति यदि चिद्भास्यं ततस्तन्मृषा
गुञ्जावह्निवदेव सर्वकलनाधिष्ठानभूतोऽस्म्यहम् ।
सर्वस्यापि दृगस्म्यहं समरसः शान्तोऽस्म्यपापोऽस्म्यहं
पूर्णोऽस्मि द्वयवर्जितोऽस्मि विपुलाकाशोऽस्मि नित्योऽस्म्यहम् ॥

மத்தோऽந்யத்ர ஹி கிஞ்சிதஸ்தி யதி
சித்பாஸ்யம் ததஸ்தன் ம்ருஷா
குஞ்ஜாவஹ்நிவதேவ ஸர்வகலநா-
திஷ்டான பூதோऽஸ்ம்யஹம் ।
ஸர்வஸ்யாபி த்ருகஸ்ம்யஹம் ஸமரஸ:
சாந்தோஸ்மி அபாபோ ஸ்ம்யஹம்
பூர்ணோऽஸ்மி த்வயவர்ஜிதோऽஸ்மி விபுலா-
காசோऽஸ்மி நித்யோऽ ஸ்ம்யஹம் ॥

ஆத்மாவன்றி வேறெதுவும் இல்லை. அப்படி இருந்தால் மஞ்சாடியில் தீ தெரிவது போல் அது பொய்யே. ஆகவே எல்லாவித தோற்றங்களுக்கும் இடம் கொடுக்கும் ஆத்மாதான் எங்கும் உள்ளது. சாந்தமாயும், தீது அற்றதாயும், பூர்ணமாயும், நித்யமாயும், இரண்டு அற்றதாயும் எங்கும் நிறைந்த, பரந்த ஆகாசமாயும் உள்ளதே ஆத்மா.

(7)

मय्यस्मिन्परमार्थके श्रुतिशिरोवेद्ये स्वतोभासने
का वा विप्रतिपत्तिरेतदखिलं भात्येव यत्सन्निधेः ।
सौरालोकवशात्प्रतीतमखिलं पश्यन्न तस्मिन् जनः
संदिग्धोऽस्त्यत एव केवलशिवः कोऽपि प्रकाशोऽस्म्यहम् ॥

மய்யஸ்மின் பரமார்த்தகே ச்ருதிசிரோ
வேத்யே ஸ்வதோ பாஸநே
காவா விப்ரதிபத்திரேத தகிலம்
பாத்யேவ யத்ஸந்நிதே: ।
ஸௌரா லோக வசாத் ப்ரதீதமகிலம்
பச்யந்ந தஸ்மின் ஜன:
ஸந்திக்தோऽஸ்த்யத ஏவ கேவலசிவ:
கோபி ப்ரகாசோஸ்ம்ஹம் ॥

வேதாந்தம் வாயிலாக அறியத் தகுந்தது ஆத்மா, அது தானே பிரகாசிப்பது, உண்மையானது. அது இருப்பதால் தான் மற்ற கரணங்கள் இயங்குகின்றன. சூர்ய வெளிச்சத்தில் காணக் கிடைக்கும் அனைத்தும் சந்தேகமின்றி நம்பப்படுவது போல் சிவமொன்றேயான பேரொளியாய் இருப்பது ஆத்மா.

(8)

नित्यस्फूर्तिमयोऽस्मि निर्मलसदाकाशोऽस्मि शान्तोऽस्म्यहं
नित्यानन्दमयोऽस्मि निर्गतमहामोहान्धकारोऽस्म्यहम् ।
विज्ञातं परमार्थतत्त्वमखिलं नैजं निरस्ताशुभं
मुक्तप्राप्यमपास्तभेदकलनाकैवल्यसंज्ञोऽस्म्यहम् ॥

நித்யஸ்பூர்திமயோऽஸ்மி நிர்மலஸதா-
காசோஸ்மி சாந்தோऽஸ்ம்யஹம்
நித்யானந்தமயோऽஸ்மி நிர்கதமஹா-
மோஹாந்தகாரோऽ ஸ்மயஹம் ।
விஜ்ஞாதம் பரமார்த தத்வமகிலம்
நைஜம் நிரஸ்தாசுபம்
முக்தப்ராப்ய மபாஸ்தபேதகலநா
கைவல்ய ஸம்ஜ்ஞோऽ ஸ்ம்யஹம் ॥

எப்பொழுதும் பிரகாசிப்பது, தூய ஆகாசம் போன்று சலனமற்றது ஆத்மா. மோஹமாகிய இருட்டு அகன்ற நித்யா னந்த மயமானது அது. வேண்டாதது எல்லாம் நீங்கப் பெற்ற பரமார்த்தத்வம் அதுவே. வீடுபேறு பெற்றவர் நாடுவது. வேற் றுமை கலவாத கைவல்யம் எனக் கூறத்தக்கதும் அதுவே.

(9)

स्वप्नद्वैतवदेव जाग्रतमपि द्वैतं मनोमात्रकं
मिथ्येत्येव विहाय सच्चिदमलस्वात्मैकरूपोऽस्म्यहम् ।
यद्वा वेद्यमशेषमेतदनिशं मद्रूपमेवेत्यपि
ज्ञात्वा त्यक्तमरुन्महोदधिरिव प्रौढो गभीरोऽस्म्यहम् ॥

ஸ்வப்னத்வைத வதேவ ஜாக்ரதமபி
த்வைதம் மனோமாத்ரகம்
மித்யேத்யேவ விஹாய ஸச்சிதமல-
ஸ்வாத்மைக ரூபோऽஸ்ம்யஹம் ।
யத்வா வேத்ய மசேஷமேத
தநிசம் மத்ரூபமேவேத்யபி
ஜ்ஞாத்வா த்யக்தமருன் மஹோததிரிவ
ப்ரௌடோ கபீரோऽ ஸ்ம்யஹம் ॥

மனதில் மட்டும்படியும் இந்த வேற்றுமையை, ஸ்வப்ன காலத்திய வேற்றுமையாகப் பொய்யெனத் தள்ளி, ஸத், சித், ஆனந்த மயமானது ஆத்மா என அறிய வேண்டும். அல்லது

நானே அகிலமும் என அறிந்து பாலைவனத்தைக் கடலாக எண்ணாமல் முற்றிலும் முற்றிய, ஆழ்ந்த ஞானமே ஆத்மா என்றவாறு தெளிய வேண்டும்.

(10)

गन्तव्यं किमिहास्ति सर्वपरिपूर्णस्याप्यखण्डाकृतेः
कर्तव्यं किमिहास्ति निष्क्रियतनोर्मोक्षैकरूपस्य मे ।
निर्द्वैतस्य न हेयमन्यदपि वा नो वाप्युपयान्तरं
शान्तोऽद्यास्मि विमुक्ततोयविमलो मेघो यथा निर्मलः ॥

கந்தவ்யம் கிமிஹாஸ்தி ஸர்வபரி -
பூர்ணஸ்யாப்ய கண்டாக்ருதே:
கர்தவ்யம் கிமிஹாஸ்தி நிஷ்கிரிய -
தநோர்மோக்ஷைக ரூபஸ்ய மே।
நிர்த்வைதஸ்ய நஹேயம ன்யதபிவா
நோ வாப்யுபாயாந்தரம்
சாந்தோऽத்யாஸ்மி விமுக்ததோய-
விமலோ மேகோ யதா நிர்மல: ॥

முழுமையாக, எங்கும் நிரம்பியுள்ள ஆத்மா இனி சென்று அடைய வேண்டிய இடமொன்றுமில்லை. செயலற்ற, மோக்ஷமே உருவான ஆத்மாவுக்கு இனி செய்ய வேண்டியதும் எதுவுமில்லை. வேற்றுமையே இல்லாதபோது விட வேண்டிய வேறொன்று ஏது? நீருண்ட மேகம், நீரைப் பொழிந்த பின், மாசற்ற, தூய அமைதியுடனிருப்பதே ஆத்மாவின் நிலையும் ஆகும்.

(11)

किं नः प्राप्तमितःपुरा किमधुना लब्धं विचारादिना
यस्मात्तत्सुखरूपमेव सततं जाज्वल्यमानोऽस्म्यहम् ।
किं वाऽपेक्ष्यमिहापि मय्यतितरां मिथ्याविचारादिकं
द्वैताद्वैतविवर्जिते समरसे मौनं परं सम्मतम् ॥

கிம் ந: ப்ராப்தமித: புரா கிமதுநா லப்தம் விசாராதிநா
யஸ்மாத் தத்ஸுகரூபமேவ ஸததம்
ஜாஜ்வல்யமானோऽஸ்ம்யஹம்
கிம் வாபேக்ஷ்யமிஹாபி மய்யதிதராம்
மித்யாவிசாராதிகம்
த்வைதா த்வைத விவர்ஜிதே ஸமரஸே
மௌனம் பரம் ஸம்மதம் ॥

பின்னும் பின்னும் ஆராய்வதனால் முன் முடிவானதும் தற்போது முடிவாவதும் ஒன்றுதானே! ஏனெனில் அது எப் பொழுதும் ஆனந்தமயமானதுதானே. வீணான ஆராய்ச்சி தேவையில்லையே! வேற்றுமையும் - வேற்றுமையின்மையும் ஒத்துப் போய்விட்டால் அங்கு மௌனம்தானே சிறப்பானது ஏற்கத்தக்கது!

(12)

श्रोतव्यं च किमस्ति पूर्णसुदृशो नित्यापरोक्षस्य मे
मन्तव्यं च न मेऽस्ति किंचिदपि वा निःसंशयज्योतिषः ।
ध्यातृ-ध्येयविभेद हानिवपुषो न ध्येयमस्त्येव मे
सर्वात्मैक महारसस्य सततं नो वा समाधिर्मम ॥

ச்ரோதவ்யம் ச கிமஸ்தி பூர்ணஸுத்ருசோ
நித்யாபரோக்ஷஸ்ய மே
மந்தவ்யம் ச நமேஸ்தி கிஞ்சிதபிவா
நி: ஸம்சய ஜ்யோதிஷ: ।
த்யாத்ரு த்யேய விபேதஹாநிவபுஷோ
ந த்யேயமஸ்த்யேவ மே
ஸர்வாத்மைக மஹாரஸஸ்ய ஸததம்
நோ வா ஸமாதிர் மம॥

ச்ரோதவ்யோ - மந்தவ்யோ - நிதித்யாஸித்வய: என்றெல்லாம் சொல்வார்கள்தான். ஆனால் நித்யம் நன்றாக ஆத்ம ஞானம் படைத்தவனுக்கு 'இனி கேட்கப்பட வேண்டிய

தொன்றுமில்லையல்லவா? அதுபோல், சந்தேஹமில்லாமல் பேரொளி கண்டவனுக்கு அது பற்றிய மனனமும் தேவை யில்லையே. தியானிப்பவன் வேறு - தியானிக்கப்பட வேண் டியது வேறு என்ற நிலைதாண்டியவனுக்கு தியானமும் தேவை யில்லைதானே! முடிவாக எல்லாம் ஒரே ஆத்மா' என்ற பேரானந்தம் கண்டவனுக்கு ஸமாதி நிலையும் வேண்டிய தில்லைதான்.

(13)

आत्मानात्मविवेचनाऽपि मम नो विद्वत्कृता रोचते-
ऽनात्मा नास्ति; यदस्ति गोचरवपुः को वा विवेक्तुंक्षमी।
मिथ्यावादविचारचिन्तनमहो कुर्वन्त्यदृष्टात्मका
भ्रान्ता एव न पारगा दृढधियस्तूष्णीं शिलावत्स्थिताः॥

ஆத்மாநாத்மவிவேசநாபி மம நோ
வித்வத்க்ருதா ரோசதே
அநாத்மா நாஸ்தி; ய தஸ்தி கோசரவபு:
கோ வா விவேக்தும் க்ஷமீ।
மித்யாவாத விசாரசிந்தனமஹோ
குர்வந்த்ய த்ருஷ்டாத்மகா
ப்ராந்தா ஏவ ந பாரகா த்ருடதிய:
தூஷ்ணீம் சிலாவத் ஸ்திதா:॥

வித்வான்கள் செய்யும் ஆத்மா - அநாத்ம ஆராய்ச்சியும் கூட எனக்கு அவ்வளவாக பிடிக்கவில்லை, ஏனெனில் அநாத்மா என்பது இல்லவே இல்லை எனலாம். அப்படி இருந்தால் தெளிவாக அதை பகுத்துக் கூற யார் தான் இயலும். ஆத்ம தர்சனமில்லாதவர்கள் வீணானவாத - பிரதிவாதச் சண்டையில் விழுந்துள்ளனர். ஆத்ம தர்சனம் பெற்றவர். முடிவு கொண்டவர் பேசாமல் சிலைபோல் அல்லவா ஆகிவிடுகின்றனர்.

(14)

वस्तुस्थित्यनुरोधतस्त्वहमहो कश्चित्पदार्थो न चा-
प्येवं कोऽपि विभामि संततदृशिर्वाङ्मानसागोचरः।
निष्पापोऽस्म्यभयोऽस्म्यहं विगतदुःशङ्काकलङ्कोऽस्म्यहं
संशान्तानुपमानशीतलमहः प्रौढप्रकाशोऽस्महम्॥

வஸ்துஸ்தித் யனுரோததஸ்த்வஹ
மஹோ கஸ்சித் பதார்த்தோ நசா
பேடயவம் கோடபிவிபாமி ஸந்தத
த்ருசிர்வாங்மானஸாகோசர: ।
நிஷ்பாபோடஸ்ம்யபயோஸ்ம்யஹம் விகதது:-
சங்கா கலங்கோடஸ்ம்யஹம்
ஸம்சாந்தானுபமான சீதல மஹ: .
ப்ரௌட ப்ரகாசோட ஸ்ம்யஹம் ॥

உண்மையைச் சொல்லுமிடத்தில், இந்த ஜீவாத்மாவும் ஒரு பதார்த்தமில்லைதான், எனினும், சொல்லுக்கும் மனதிற்கும் எட்டாத, எப்பொழுதும் அறிவான வடிவிலே விளங்கிக் கொண்டிருக்கிறது. அங்குபாபத்திற்கோ பயத்திற்கோ ஸந்தேக விகல்பங்களுக்கோ இடமில்லை. பின் நிகரற்ற தணிவும், பேராற்றலும் கொண்ட ஒளிமயமாக உள்ளது.

(15)

योऽहंपूर्वमितः प्रशान्तकलनः शुद्धोऽस्मि बुद्धोऽस्म्हम्
यस्मान्मत्त इदं समुत्थितमभूदेतन्मया धार्यते ।
मय्येव प्रलयं प्रयाति निरधिष्ठानाय तस्मै सदा
सत्यानन्दचिदात्मकाय विपुलप्रज्ञाय मह्यं नमः ॥

யோடஹம் பூர்வமித: ப்ரசாந்தகலன:
சுத்தோடஸ்மி புத்தோடஸ்ம்யஹம்
யஸ்மான் மத்த இதம் ஸமுத்திதமபூத்
ஏதன்மயா தார்யதே ।
மய்யேவ ப்ரலயம் ப்ரயாதி நிரதி-
ஷ்டானய தஸ்மை ஸதா
ஸத்யானந்த சிதாத்மகாய
விபுலப்ரஜ்ஞாய மஹ்யம் நம: ॥

எந்த ஆத்மா முன்பிருந்ததோ அதுவே இப்பொழுதும் சுத்த - புத்த வடிவத்தில் உள்ளது. எந்த ஆத்மாவில் தோன்றியதோ

ரதோ ஒன்று, அதுவே இப்பொழுதும் தரிக்கப்பட்டு நிற்கிறது. அதுவே தக்க சமயத்தில் ஆத்மாவிலேயே ஒடுங்கியும் போகிறது. அத்தகைய ஸத்ய - ஆனந்த - ஜ்ஞான மயமான, எதையும் சார்ந்திராத பேரறிவுக்கு - ஆத்மாவுக்கு - நமஸ்காரம்.

(16)

सत्ताचित्सुखरूपमस्ति सततं नाहं च न त्वं मृषा
नेदं वापि जगत् प्रदृष्टमखिलं नास्तीति जानीहि भोः।
यत्प्रोक्तं करुणावशात्त्वयि मया तत्सत्यमेतत्स्फुटं
श्रद्धत्स्वानघ शुद्धबुद्धिरसि चेन्माऽत्रास्तु ते संशयः॥

ஸத்தாசித்ஸுக ரூபமஸ்திஸததம்
நாஹம் ச ந த்வம் ம்ருஷா
நேதம் வாபிஜகத் ப்ரத்ருஷ்டமகிலம்
நாஸ்தீதி ஜாநீஹி போ:।
யத்ப்ரோக்தம் கருணாவசாத் த்வயி
மயா தத்ஸத்யமேதத்ஸ்புடம்
ச்ரத்தத்ஸ்வானக சுத்த புத்திரஸிசேத்
மாऽத்ராஸ்து தே ஸம்சய:॥

ஸத் - சித் - ஆனந்தம் அன்னியில் நான் என்பதும் நீ என்பதும் இல்லை. அது பொய். இந்த உலகும் இல்லை. காணும் காட்சியும் இல்லை என்று அறிவாய். கருணை கூர்ந்து நான் கூறியதெல்லாம் உண்மையெனக் கொள்வாய்! நீ சுத்தமான அறிவு படைத்தவனாயிற்றே! உனக்கேன் வீண் ஸந்தேகம்?

(17)

स्वारस्यैकसुबोधचारुमनसे प्रौढानुभूतिस्त्वियं
दातव्या न तु मोहदग्धकुधिये दुष्टान्तरङ्गाय च।
येयं रम्यविदर्पितोत्तमशिरः प्राप्ता चकास्ति स्वयं
सा चेन्मर्कटहस्तदेशपतिता किं राजते केतकी॥

ஸ்வாரஸ்யைகஸுபோதசாருமனஸே
ப்ரௌடானுபூதி ஸ்த்வியம்
தாதவ்யா நது மோஹதக்தகுதியே
துஷ்டாந்தரங்காயச।
யேயம் ரம்யவிதர்பித - உத்தமசிர:
ப்ராப்தா சகாஸ்தி ஸ்வயம்
ஸா சேத் - மர்கட ஹஸ்ததேசபதிதா
கிம் ராஜதே கேதகீ॥

இந்த ப்ரௌடானுபூதி என்ற சீரிய உணர்வு, தன்னியல்பான தூய மனதுடையவருக்கே வழங்கப்பட வேண்டும்; அன்றி மோஹம் கவிழ்ந்த புத்தியும், தீய எண்ணமும் கொண்டவருக்கு வழங்கலாகாது. தாழம்பூ, கர்வம் தலையெடுக்காத, சீரிய தலையில்தானே அழகாக இருக்கும்; அதுவே குரங்கின் கைத்தலத்தில் போய்விட்டால் விளங்காதன்றோ!

ப்ரௌடானுபூதி முற்றிற்று

